[10th September 1960

முடிக்க வேண்டும் என்று சொல்லியும் இன்னும் முடிக்காமல் காலதாமதம் ஏற்படுகிறது. அதைத் தவிர்க்க முன் வருவார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இதற்கு பல காரணங்களைச் சொல்ல முடியும். அந்தக் காரணங்கள் எல்லாம் கனம் அங்கத்தினருக்கே நன்ருகத் தெரியும். ஏர்க்காட்டில் எவ்வளவு கஷ்டங்கள் தகராறுகள் ஏற்பட்டன என்பதும் அதை ரொம்ப சிரமத்தோடு எடுத்துச் செய்தார்கள் என்பதும் அவருக்கு நன்ருகத் தெரியும். அவருடைய பிராந்தியத்தில் எப்படிப்பட்ட கஷ்டங்கள் ஏற்படுகின்றன என்பது அவருக்கு நன்ருகத் தெரியும்.

*ouse-sites (Harijans).*

*597 Q.—SRI P. G. MANICKAM: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பதற்கு பதிலாக வீட்டு மனைக்கட்டு நிலங்கள் வாங்கிக் கொடுப்பதையே அங்கீகரித்து உதவித் தொகை அனுப்பவேண்டுமாய் மத்திய சர்க்காருக்கு நம் மாகாண சர்க்கார் தெரிவித்திருக்கிருர்களா?

(ஆ) அப்படியாஞல், விவரங்கள் யாவை?

THE HON. SRI P. KAKKAN: (a) Yes, Sir.

(b) The basis for working out the scheme of provision of developed house-sites to Harijans is under examination of the Government. The cost of the scheme has therefore not yet been settled.

*Thiruthuraipoondi Block*

*598 Q.—SRI A. VEDARATHNAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

திருத்துறைப்பூண்டி பிளாக்கை இரண்டு பிளாக்குகளாகப் பிரிக்கக் கோரிய அந்த பிளாக்கின் தீர்மானத்தின் மேல் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Sir, the matter is under correspondence with the Government of India.

SRI A. VEDARATHNAM: இன்று இந்த மூன்று ரெவின்யூ பிர்க்காக்கள் அதாவது திருத்துறைப்பூண்டி, ஆலத்தம்பாடி, தலைஞாயர் இவைகள் எல்லாம் சேர்ந்து ஒரே ப்ளாக்காக இருக்கிற காரணத்தால் அங்கே வேலை செய்வது கஷ்டமாக இருக்கிறது. அது அன்-வீல்டி யாக இருக்கிறது. ஆகவே அதை இரண்டு ப்ளாக்குகளாக பிரிக்க சர்க்கார் தீவிரமாக விரைவில் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா?

10th September 1960]

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதைத்தான் நான் விடை அளித்த போது குறிப்பிட்டேன். அதை உணர்ந்துதான் இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு பிரிக்க வேண்டும் என்பதைப்பற்றி கூறியிருக்கிறது. அவர்களுடைய அங்கீகாரம் பெற்று அவைகள் பிரிக்கப்படும் என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

*Roads* (*Repairs*)

*599 *Q.*—SRI P. G. MANICKAM:<br>SRI K. R. NALLASIVAM: } கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) லோயர் பவானி வாய்க்கால், மேட்டூர் வலது கரை வாய்க்கால் ஆகியவைகளின் பாசனத்துக்கு விடப்படும் தண்ணீரானது ரோடுகளின் குறுக்கே செல்வதால் ரோடுகள் பழுதடைந்திருப்பதால் இவைகளைச் செப்பனிடும் வேலைகளைக் கவனித்து வர ஸ்பெஷல் அதிகாரிகள் நியமிக்கப்பட்டிருக் கிறார்களா?

(ஆ) ரோடுகளிலே எத்தனை இடங்களிலே பழுது பார்க் கப்பட வேண்டுமென்று கணக்கிடப்பட்டிருக்கிறது?

(இ) இத்திட்டத்துக்காக எவ்வளவு தொகை தேவைப் படும்?

(ஈ) 1960–61-ம் வருடத்திலே இத்திட்டத்திற்காக எவ்வளவு தொகை செலவிடப்படும்?

THE HON. SRI P. KAKKAN: (a) *Lower Bhavani Project Area.*—Yes, Sir.

*Mettur Right Bank Canal Area.*—No, Sir.

(b) *Lower Bhavani Project Area.*—The number of crossings to be provided with cross-drainage work is 477.

*Mettur Right Bank Canal Area.*—The roads have been affected at 47 places.

(c) *Lower Bhavani Project Area.*—About Rs. 15 lakhs.

*Mettur Right Bank Canal Area.*—About Rs. 1.9 lakhs.

(d) *Lower Bhavani Project Area.*—About Rs. 10 lakhs.

*Mettur Right Bank Canal Area.*—No expenditure is proposed to be spent during 1960–61, since the scheme has not been proposed for sanction. However for making temporary arrangements, the Divisional Engineer (Highways), Erode, proposes to spend a sum of Rs. 7,800 from out of the annual maintenance allotment during the current year.

SRI P. G. MANICKAM: திட்டங்கள் அதிகமாக இருக்கிறது. ஆனால் அதற்கு நியமிக்கப்பட்ட அதிகாரிகள் ஆறு மாதங் களுக்குத்தான் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதாக எனக்கு ஞாபகம் இருக்கிறது. திட்டம் பெரிய அளவில் இருப்பதால்